எனக்குத் தெரியவரவில்லை. திருப்பாவையில் நாராயணனைத் தவிர வேறொரு தெய்வத்தைப் பற்றின பேச்சே கிடையாது. திருவெம்பாவையில் நாராயணனைத் தாழ்த்திப் பேசியிருப்பதாகப் பிரசித்தமாயுள்ளது. இதெல்லாம் எப்படியாவது இருக்கட்டும். முக்கியமாகச் சிலவிஷயங்கள் சொல்லுகிறேன். பெரியவாளிடம் சென்று ஒன்று விடாமல் விஜ்ஞாபனம் செய்யுங்கள். (என்று ஆரம்பித்தபோது பாடசாலை மானேஜரான Late ஸ்ரீஉ வே. தி வி. சிங்கராசாரியார் அங்கிருந்தவர் "இந்த மகாநாட்டில் அந்வயிக்க எனக்கு ஸௌகரியமில்லையென்று ஓரே வார்த்தையாகச் சொல்லியனுப்பிவிடலாமே; விரிவு எதற்கு"? என்று ஸம்ஸ்க்ருதபாஷையில் எனக்கு உபாம்சுவாகத் தெரிவித்தார். விவக்ஷிதங்களை ப்ராப்தேஸமயே வெளியிடாமல் அடக்கிவைத்துக்கொள்ள என்னாலாகாதே என்று சொல்லிவிட்டு பெரியவாளிடம் விஜ்ஞாபிக்க வேணுமென்றதைச் சொல்லத் தொடங்கினேன்.

ஸர்வஜ்ஞரான பெரியவாளுக்குத் திருப்பாவை திருவெம்பாவைகளின் பரிஸ்திதி தெரியாமலில்லை. ஆயினும் (ஸ்மாரயே) என்கிற கணக்கில் நினைவூட்டுகிறேன் ஸ்ரீ வைஷ்ணவ ஸம்ப்ரதாயத்தில் (உ வே.) என்று ஒரு சிறப்புப் பெயரை ஒவ்வொருவரும் வைத்துக் கொண்டிருக்கிறோம் 'உபயவேதாந்த ப்ரவர்த்தகாசார்ய' என்பதன் ஸம்க்ஷேபம் அது; நாங்கள் ஸம்ஸ்க்ருத வேதத்தோடு நிற்காமல் த்ராவிடவேதத்தையும் ஒருகண்ணாகக் கொண்டிருக்கிறோம்; அதிலும் ஸம்ஸ்க்ருத வேதத்தை இடக் கண்ணாகவும் த்ராவிட வேதத்தை வலக் கண்ணாகவும் கொண்டிருக்கிறோம். எங்களுடைய ஆசார்ய பரம்பரையில் தலைவரானவர் நாதமுனிகளென்பவர். அவர் படாதபாடுகளும் பட்டு, என்றைக்கோ பரமபதம் சேர்ந்திருந்த நம்மாழ்வாரை ஸாக்ஷாத்கரித்து அவ்வாழ்வார் முகமாக நாலாயிர திவ்யப்ரபந்தங்களைப் பெற்றாரென்று தென்கலையார் வடகலையார் என்கிற வாசியில்லாமல் எல்லோரும் எழுதி வைத்திருக்கிறோம். பரம்பரையாகச் சொல்லியும்வருகிறோம். அந்த நாதமுனிகள் ப்ராஹ்மணோத்தமர்; வடமொழி வேதக் கடல் கடைந்தவர். அவர் தாம் பெற்ற திவ்யப்பிரபந்தங்களைத் தம்முடைய சிஷ்ய ப்ரசிஷ்ய பரம்பரயா ஸ்ரீ வைஷ்ணவ ஸந்தானத்தில் இன்றளவும் ஸூர்ய சந்திரர்களுள்ளவளவும் பரவிச் செல்லும்படி செய்து வைத்திருக்கிறார்.

அந்த நாதமுனிகளுக்கு அடுத்தபடி ஆசார்ய பீடத்தை யலங்கரித்தவரும் அவருடைய திருப்பேரனுமான (ஸ்ரீயாமுனாசார்யரென்கிற) ஆளவந்தார் தமது பிதாமஹரான நாதமுனிகளைக்காட்டிலும் பிரபல பண்டிதர். இளம் பிராயத்திலேயே சோழராஜ ஸபையிற் சென்று "மீமாம்ஸாசாஸ்த்ரயுக்மச்ரம விமலநமா ம்ருக்யதாம் மாத்ருசோங்ய:" என்று அறை கூவினவர். அன்னவரும் த்ராவிடவேதத்திலேயே போது போக்கினவர் ஸ்ரீராமானுஜர், கூரத்தாழ்வான், பட்டர், நஞ்சீயர், நம்பிள்ளை, பெரியவாச்சான்பிள்ளை வடக்குத்திருவீதிப் பிள்ளை பிள்ளைலோகாசாரியர், வேதாந்ததேசிகர், திருவாய்மொழிப்பிள்ளை, மணவாளமாமுனிகள்— என்று ப்ரஸித்தர்களான ஸ்ரீவைஷ்ணவாசாரியர்கள் ஒருவர் தப்பாமல் எல்லோரும் திவ்யப்ரபந்தங்களைக்கொண்டு காலக்ஷேபம் செய்வதை முக்கியமான விரதமாகக் கொண்டிருந்தவர்கள்.

இவர்கள் இன்று நேற்றைய ஆசாரியர்களல்லர்; அப்ராஹ்மணர்களல்லர்; ஸம்ஸ்க்ருத வேதவிமுகர்களல்லர். திவ்யப்ரபந்தங்களில் வேதார்த்தங்கள் விசேஷமாகப் பரிமளிக்கின்றனவென்று கொண்டே இதை நிதியாகப் பரிக்ரஹித்தார்கள். விஷ்ணுவாலயச் சிறப்புகளுக்கு திவ்யப்ரபந்தங்களையே மூலகாரணமாக வைத்து, இன்ன உத்ஸவங்களில் இன்ன திவ்யப்பிர

பந்தங்களை ஸேவிக்கவேண்டுமென்கிற நிபந்தனைகளையும் ஏற்படுத்தி, ஒருவருடைய புத்திக்கும் நெஞ்சுக்கும் எட்டாத, பெருமைவாய்ந்த திருவத்யயநோத்ஸவமென்று உலகப்பிரசித்தமான பகற்பத்து இராப்பத்து இயற்பாத்து என்கிற உத்ஸவங்களையும் ஏற்படுத்தி, இதற்கு அநத்யயன காலநியமத்தையும் கட்டளையிட்டு வைத்திருக்கிற சீரும் சிறப்புகளும் திவ்யதேசங்கள் மலிந்த தென்னாட்டில் யாருக்குத் தெரியாமலிருக்கிறது! பக்ஷபாதமற்ற கம்பர்பெருமானும் சடகோபரந்தாதியில் "அந்தமிலா மறையாயிரத்தாழ்ந்த வரும்பொருளைச். செந்தமிழாகத் திருத்திலனேல் நிலத்தேவர்களும், தந்தம் விழாவுமழகுமென்னாம்? .. ... என்கிற ஒரு பாடலினால் திவ்யப்பிரபந்தப் பெருமையைப் பேசிவைத்தார்; இச்செய்யுளின் கருத்தாவது, நம்மாழ்வார் வேதப் பொருள்களைத் திவ்யப்பிரபந்தமாக அமைத்திராமற்போனால் தேவாலயங்களின் உத்ஸவ அழகும் வைணவ அந்தணர்களின் வீறும் தெரியுமே! என்பதாம்.

இதெல்லாம் ஒருபுறமிருக்க: ஸ்ரீ ராமாநுஜர் காலத்திலிருந்து திவ்யப் பிரபந்தங்களுக்கு வியாக்யானங்களைப் பரமவைதிகர்களானபோராசிரியர்கள் எழுதிவைத்திருப்பதும், அதைப் பல பல நியமங்களுடன் கேட்டுணர்வதென்கிற பத்ததி எங்கும் ஒரு சிறப்பான முறையில் இற்றைக்கும் வந்துகொண்டிருப்பதும் எந்த மதத்திலுமில்லாத ஓர் ஆச்சர்யமல்லவா? திவ்யப் பிரபந்தங்களின் பொருள்களைப் பிரவசனம் செய்துவந்தார்களென்பதேயன்றோ ஸ்ரீ வைஷ்ணவத் தலைவர்களுக்கு ஏற்றமாகச் சொல்லப்பட்டு வருகிறது. பொதுவாகத் திவ்யப் பிரபந்தங்களின் பெருமை ஒருபுறம் நிற்க பிரகிருதம் திருப்பாவையைப் பற்றித் தனிப்படச் சொல்லுகிறேன் கேளுங்கள். நாலாயிரப் பிரபந்தங்களும் ஒரு தட்டாய், திருப்பாவை மட்டும் ஒரு தட்டாய் எங்கள் முன்னோர்களால் குலாவப்பட்டுள்ளது. திருவாய்மொழி முதலிய மற்றைப் பிரபந்தங்களுக்கெல்லாம் ஒவ்வொரு ஸமய விசேஷத்தில்தான் ஏற்றம். திருப்பாவைக்கு அப்படியல்ல மார்கழி மாதத்தில விசேஷ ஏற்றம் எப்படியிருக்கட்டும் தினப்படியாகவே வைணவர்களின் கிருஹங்களிலும் மடங்களிலும் ஆலயங்களிலும் திருப்பாவை லோபியாமல் பூஜைநடைபெறுது. எந்தத் திருவிழா நடந்தாலும் 'திருப்பாவை சாத்துமுறை' என்பதே ஒரு முக்கியமான கெட்டம்.

திருப்பாவையின் பெருமையைப் பற்றிப் பல நூற்றாண்டுகட்கு முன்பு தோன்றிய ஒரு வெண்பா—"பாதகங்கள் தீர்க்கும் பரமனடி காட்டும், வேதமனைத்துக்கும் வித்தாகும்—கோதை தமிழ். ஐயைந்துமைந்துமறியாத மானிடரை வையஞ்சுமப்பதும் வம்பு" என்பதாம் திருப்பாவை தெரியாதவரிடமிருந்து தண்ணீர் வாங்கிக் குடிப்பதும் செய்யார் வைணவப் பெரியார் உலகுக்கே உயிராக விளங்கின ஸ்ரீ ராமாநுஜர் "திருப்பாவை ஜீயர்" என்றே போற்றப் பட்டுவந்தார், திருப்பாவைக்கு அவதரித்துள்ள வியாக்யானங்களும் அனேகம். இவ்வாறாகத் திருப்பாவையின் பெருமை சொல்லச் சொல்ல வளரும்.

இனி திருவெம்பாவை யெடுத்துக்கொள்வோம் இதை அந்நாள் தொடங்கி இந்நாள் வரையில் ஒரு பிராமணரும் பரிக்ரஹித்தது கிடையாது சைவர்களான பிராமணர்களோ அத்வைதிகளான பிராமணர்களோ யாரும் இதை நெஞ்சாலும் எண்ணினதில்லை. எண்ணப் போகிறதுமில்லை சிவன் கோவிலொன்றிலும் இதற்குப் பிரசாரமும் கிடையாது. ஓதுவார் என்று சிலர் இருப்பதாகவும் அவர்கள் கையில் புத்தகங்கொண்டு சில கோவில்களில் படித்து விட்டுப் போவதாகவும் திருவிழாக்கள் நடந்தால் தேவாரப் பாட்டுக்களைச் சொல்லிப் பின்னால் பஜனை செய்து போவதாகவும் சமீபகால நிகழ்ச்சிகளைக் கேட்டு வருகிறோம் அந்தப்

பாடல்களுக்கும் பிராமணர்களுக்கும் ஒருவிதமான சம்பந்தமுமில்லையென்பதை மறுக்கக் கூடியவர்கள் எவருமில்லையென்பது திண்ணம். பெரியவாள் தங்களுடைய மடத்தில் நாங்கள் சிலர் வந்து திருப்பாவை யோதினால் இதை எப்படி சகிக்கமாட்டார்களோ, அப்படியே திருவெம்பாவை யோதுவார் சிலர் வந்து அதை யோதினாலும் சகிக்க மாட்டார்களென்பதில் சந்தேகமில்லை. ஆக இரண்டு பிரபந்தங்களிலும் பெரியவாளுக்கு விருப்பமின்மை யொத்திருக்க இவ்விரண்டையும் சேர்த்து மகாநாடு நடத்தவேணுமென்னும் முயற்சி மிகவும் அவசியமற்ற தென்று நான் விநயத்தோடு விஜ்ஞாபனம் செய்வதாக நமஸ்கார பூர்வகமாய்ச் சொல்லுங்கள் — என்று சொல்லி முடித்தேன். அப்படியே சொல்லுகிறோமென்று சொல்லி விடை பெற்றுப் போய்விட்டார்களிருவரும்.

அவர்கள் பெரியவாளிடஞ் சென்று இவ்வளவையும் அநுவாதம் செய்திருக்க மாட்டார் களெனினும் ஸாரமாகச் சில சொல்லியேயிருப்பார்கள். பிறகு இதைப்பற்றி ஒரு ப்ரஸ்தாவமும் நேர்ந்ததில்லை. அதன் பின் அனேக ஸமயங்களில் பெரியவாளும் நாமும் ஸந்தித்திருந்துங்கூட இது பற்றின சர்ச்சை ஏற்படவேயில்லை. திருப்பாவையில் "தீக்குறளை சென்றோதோம்" என்ப தைப் பற்றிக் களேபரமுண்டாகி நாமெழுதியிருந்ததும் உலகம் பரவியதே. அதன் பின்னரும் பெரியவாளைச் சந்திக்க நேர்ந்ததுண்டு அப்போதும் திருப்பாவையைப்பற்றின சர்ச்சை நிகழ்ந்ததில்லை பெரியவாள் பெரும்பாலும் யாத்திரையில் இருந்துவருவதால் அதிகமாக நெருங் கிச் சந்திக்க வாய்ப்புமில்லை. ••• ••• •••

—கடிதங்கள்—

## திருநாங்கூர் மங்களாசாஸன உத்ஸவம்

வண்டமருஞ்சோலை வயலாலி நன்னுடன், வாமான்தேர்ப்பரகாலனை ஸ்ரீதிருமங்கை ஆழ்வார் திருநாங்கூர்த் திருப்பதிகளை விசேஷித்து விபவத்தில் மங்களாசாஸனம் செய்தபடி அர்ச்சையிலும் விடாதே மங்களாசாஸனம் செய்யும் உத்ஸவம் காளயுக்தி வருஷம் தை மீ 14 15. 16 தேதிகளில், ஸ்ரீ வைஷ்ணவர்கள் பொலிக பொலிக பொலிக என்று போற்றும் வண்ணம் நடைபெற்றது

14ம் தேதி திருக்குறையலூர், திருமங்கைமடம், திருக்காவளம்பாடி, திருமணிக்கூடம் திருப்பார்த்தன்பள்ளி எம்பெருமான்களின் சந்நிதிகளில் மங்களாசாஸனம் நடைபெற்றது. அன்று மதியம் காவிரிக்கரையில் ஆழ்வாருக்கு ஸ்ரீரங்கநாதன், திருநறையூர் நம்பி இவர்களின் மாலை மரியாதை நடைபெற்றது. இரவு திருமணிமாடக்கோயில், திருவண்புருடோத்தமம், திரு வைகுந்த விண்ணகரம், திருச்செம்பொன்செய் கோயில், திருத்தெற்றியம்பலம், திரு அரிமேய விண்ணகரம் சந்நிதிகளில் மங்களாசாஸனம் நடைபெற்று ஸ்ரீ ஆழ்வார் மீண்டும் மணிமாடக் கோயிலுக் கெழுந்தருளினார்.

15ம் தேதி திங்கட்கிழமை பதினொரு எம்பெருமான்களையும் ஒருசேர ஒரே பந்தலில் ஸ்ரீ ஆழ்வார் மங்களாசாஸனம் செய்து மாலை மரியாதைகள் பெற்றுக்கொண்டது "கண்டோம் கண்டோம்" என்று ஆழ்வார் திருவாய் மலர்ந்தருளியபடி கண் படைத்த பயனாகவிருந்தது இரவில் பதினொரு எம்பெருமான்கள் கருடவாஹனங்களிலும், திருமங்கைமன்னன் குமுதவல்லி நாச்சியாருடன் ஹம்ஸவாஹனத்திலும் திகழ ஸ்ரீ மணவாள மாமுனிகள் ஆழ்வாரையும் எம்பெருமான்களையும் மங்களாசாஸனம் செய்து கொண்டே திருவீதிகளில் எழுந்தருளினது

நேரில் சேவித்து ஆனந்தம் பெற வேண்டுவதாக அமைந்தது. திருமங்கை மன்னன் மங்களாசாசனத்தையொட்டிப் பரகாலன் பைந்தமிழ் மகாநாடு நடைபெற்றது. விழாவில் கலந்து கொண்டு தமிழ்நாடு நல்வாழ்வுத் துறை மந்திரி திரு இரா. சௌந்தரராஜன் திருமங்கையாழ்வார் பாடல்கள் தமிழ்த்தாய்க்கு அணிகலன்கள் என்றும், ஸ்ரீரங்கம் முதல்திருப்பதியாகையால் ஆழ்வார் ஸ்ரீரங்கத்தில் மண்டபப் பிராகாரங்கள் நிர்மாணித்தருளினார் என்றும் பேசினார் திருநாங்கூர் பிரதிவாதிபயங்கரம், வித்வான் ஸ்ரீ உ. வே ஸ்ரீ நிவாஸாசாரியார், மற்றும் ஸ்ரீமான்கள் மணவாளன், ரங்கராஜன், குமாரவாடி சே. ராமாநுஜாசாரியார் ஆகியோர் திருமங்கை மன்னனின் பெருமைகளைப்பற்றிப் பரக்க உபந்யசித்தனர் அறநிலைய ஆணையர் திரு சுப்ரமணியன் அவர்களும் விழாவில் கலந்து கொண்டார்.

16ம் தேதி செவ்வாய்க்கிழமையன்று திருவெள்ளக்குளம், திருத்தேவனார் தொகை சந்நிதிகளில் மங்களாசாசனம் நடைபெற்றது திருவாலியில் ஆழ்வார் திருமுன்பே ஸ்ரீலக்ஷ்மீ நரஸிம்மப் பெருமாளுக்கு கருட ஸேவை நடைபெற்றது திருவாலி விஷயமான முப்பது பாசுரங்களும் இந்தச் சந்நிதியில் சேவிக்கப் பெற்றன, யாத்ரீக ஸ்ரீ வைஷ்ணவர்களுக்கு இந்தச் சந்நிதியில் விசேஷமான முறையில் ப்ரஸாத விநியோகம் நடைபெற்றது. திருநகரியில் ஸ்ரீ வயலாலி மணவாளன் கருடசேவையுடன் இந்த உத்ஸவம் பூர்த்தியாயிற்று. ஸ்ரீ வைஷ்ணவர்கள் பெருந்திரளாக வந்து இந்த உத்ஸவத்தை ஆண்டுதோறும் சேவிக்கும்படிப் பிரார்த்திக்கப்படுகிறார்கள்,

திருவாலி கிருஷ்ண ஸ்வாமி.

## இரு பெரியார்களின் பரமபதப்ராப்தி

## டாக்டர். P.B. அண்ணங்கராசாரியாரின் மறைவு

திருவிந்தளூர் பிரதிவாதிபயங்கரம் அண்ணங்கராசாரியர் என்பவர் பிரபல டாக்டர் மாம்பலத்தில் பிரசித்தராயிருந்தவர் நேற்று ஜனவரி மாதம் 26ந்தேதி ஆசாரியன் திருவடியடைந்தார் வாணிமஹால் என்கிற உபந்யாஸ மண்டபத்தின் நிர்மாணத்திற்கு இவரே முக்கியஸ்தராயிருந்தவர் இவருடைய புத்திரர்கள் மேதாவிகளாய் விளங்குகின்றனர். இவருடைய ஸ்தானத்தை நிரப்புவாரில்லை இவருடைய பிராயம் எழுபது இருக்கலாம்.

(2) திருவரங்கம் பெரிய கோயிலில் ஸ்ரீரங்கநாராயண ஜீயர்ஸ்வாமி பட்டத்தை அலங்கரித்தருளியிருந்த சதுச் சாஸ்த்ர வித்வன் மணியான ஸ்ரீமதுபயவே, காரப்பங்காடு தேசிகாசார்யஸ்வாமியின் அத்விதிய புத்ர ரத்நமும், ந்யாய வேதாந்த வித்வந் மணியுமான தேசி, ரங்கராமாநுஜாசாரியர் ஸ்வாமி (5—2—79) அன்று ஸ்ரீபெரும்பூதூரில் திருநாடலங்கரித்தருளினார் என்பதை மிக்கவருத்தத்துடன் தெரிவித்துக்கொள்ளுகிறோம் இந்த ஸ்வாமி சிலஸம்வத்ஸரங்களாய் ஸ்ரீபெரும்பூதூரில் உபய வேதாந்த க்ரந்த ப்ரவசன நிஷ்ணாதராய் எழுந்தருளியிருந்தார், இடையில் வாயு பாதையினால் சிரமப்பட்டு தாராளமாக ஸஞ்சரிக்க முடியாமலிருந்தார் இவர் திருத்தகப்பனார் பக்கலில் ஸாமாந்ய சாஸ்த்ரத்தையும் அத்யாத்ம சாஸ்த்ரத்தையும் நன்கு அதிகரித்து விளக்கில் கொளுத்தின தீவட்டி போல் விளங்கினார். சில வருஷங்கள் திருவல்லிக்கேணிக்கு எழுந்தருளி அங்கும் காலக்ஷேபங்கள் ஸாதித்து வந்தார், ஸ்ரீமத்பரமஹம்ஸேத்யாதி வர்த்தமாந யதிராஜ ஜீயர்ஸ்வாமி. இந்த ஸ்வாமி ஸன்னிதியில் மிகவும் ப்ரவணராயிருந்து, உபய வேதாந்த ரஹஸ்யங்களையும் அதிகரித்தருளினார். இந்த ஸ்வாமியின் வியோகம் ஸ்ரீவைஷ்ணவ ஸமுதாயத்திற்கே அத்யந்த சோசநீயம்.

ஸ்ரீமதே ராமாநுஜாய நம :

# கீழ்த்திருப்பதி சிறிய ஜீயர்ஸ்வாமி மடத்தின் சிலாசாஸநத் திறப்பு விழா

(திருமலை அனந்தாண்பிள்ளை குன்றபாக்கம் நியாய வேதாந்த வித்வான்
சிரோமணி கிருஷ்ணமாசாரியர்)

கீழ்த் திருப்பதியில் உள்ள சிறிய ஜீயர்ஸ்வாமி மடம் ஸ்ரீமத் பரம ஹம்ஸபரிவ்ராஜகாசார்யரான இளைய கோவில்கேள்வி அப்பன் கோவிந்த ராமாநுஜ (வர்த்தமாந சிறிய) ஜீயர்ஸ்வாமிகளால் இரண்டு லக்ஷ ரூபாய்ச் செலவில் ஜீர்ணோத்தாரணம் செய்யப் பெற்று, நடந்த நளஸூ கார்த்திகை மீ 21உ (6-12-77)ல் ஸம்ப்ரோக்ஷணமும் நடைபெற்ற விஷயம் அனைவரும் அறிந்ததே. அச்சமயம் நம் பிள்ளையின் திருவவதாரோத்ஸவம் நடந்து கொண்டிருந்தபடியினால், ஜகதாசார்ய ஸிம்ஹாஸநாதீச்வர - பத்ம விபூஷண - மஹாவித்வான் - ஸ்ரீ உ. வே. காஞ்சீ ப்ரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசார்ய ஸ்வாமிகள் ஷை ஸம்ப்ரோக்ஷணத்திற்குஎழுந்தருள முடியாமற் போகவே, அந்த ஸ்வாமிகளை எப்படியாவது மடத்தில் பொன்னடி சாத்தச் செய்யவேணுமென்று ஸ்ரீ சிறிய ஜீயர்ஸ்வாமிக்கிருந்த பாரிப்பே இச் சிலாசாஸநத் திறப்பு விழாவாகப் பரிணமித்ததென்னலாம்.



ஸ்ரீ ஜீயர்ஸ்வாமியின் ப்ரார்த்தனைக் கிணங்கிய ஸ்ரீ காஞ்சீ ஸ்வாமி, நிகழும் காளயுக்தி ஸூ தைமீ 12உ (25-1-79) வியாழக்கிழமை காஞ்சியிலிருந்து எழுந்தருள, ஸ்ரீ ஜீயர்ஸ்வாமியும் அவர்தமக்கு அந்தரங்கர்களும் பூர்ணகும்பத்துடன் அவரை வரவேற்றனர். பகல் மூன்று மணிக்கு ஷை மடத்தின் வாசலிற் பதிக்கப் பெற்றிருந்த தமிழ் - தெலுங்கு சிலாசாஸநங்களை ஸ்ரீ காஞ்சீ ஸ்வாமி திறந்து வைத்தருளினர். பின்பு ஸ்ரீவைஷ்ணவர்கள் குழுமியிருந்த ஷை மடத்தின் பெருமாள் ஸந்நிதிக்கூடத்தில், ஸ்ரீமான் தி. அ. கோபாலாசாரியர் மங்கள ச்லோகங்களை இசையுடன் அநுஸந்திக்கவும், அடி

யேன் ஸ்ரீ காஞ்சீ ஸ்வாமிக்கும் மற்ற ஸபையிலுள்ளோர்க்கும் நல்வரவு கூறவும் ஸபை ஆரம்பமாயிற்று.

அதன் பிறகு ஸ்ரீ காஞ்சீ ஸ்வாமி - க்ருபை என்பது ஸஹேதுகமா நிர்ஹேதுகமா என்ற விசாரம் இன்றோடு தொலைந்து அது நிர்ஹேதுகந்தான் என்று தீர்ந்து விட்டது. ஸ்ரீ சிறிய ஜீயர்ஸ்வாமி அடியேனை வரவழைத்து இக்கைங்கர்யத்தில் அந்வயிக்கச் செய்த க்ருபையே இவ்வர்த்தத்தை நிலை நாட்டவல்லது என்று, தம்முடைய விநயமெல்லாம் தோன்றப் பேசத் தொடங்கி ஸ்ரீபாஷ்ய மங்கள ச்லோகத்தின் விவரண ரூபமான மதுரதமோப ந்யாஸத்தைச் செய்தருளினர். அதில் முதன் முதலாக, ச்ருதப்ரகாசிகாவ்யாக்யானத்தை யநுஸரித்து, அகிலபுவநஜந்மேத்யாதியான ஸ்ரீ பாஷ்ய மங்களச்லோகம் எம்பெருமானைப் பற்றியதென்றும், அது தன்னில், மேல் நான்கு அத்யாயங்களிலும் விரிவாகக் கூறப்படும் "காரணத்வம் அபாத்யத்வம் உபாயத்வம் உபேயதா" என்னும் நான்கு முக்யார்த்தங்களும் சுருக்கமாகக் காட்டப்பட்டுள்ளன வென்றும் மிக விளக்கமாக நிரூபித்துக் காட்டி, இந்த ச்லோகம் எம்பெருமானைப் பற்றியதென்பது மேலெழுந்தாற்போல் தோன்றினாலும் ஊன்றி நோக்கினால் இது நம்மாழ்வாரைப்பற்றியதென்பது ஸித்தாந்தமாகத் தடையில்லை. மாறனடி பணிந்துய்ந்தவரான எம்பெருமானார் "பாஷ்யகாரர் இது கொண்டு ஸூத்ரவாக்யங்கள் ஒருங்கவிடுவர்" என்னும் ஆசார்யஹ்ருதய ஸ்ரீஸூக்தியின்படியே, ஸ்ரீபாஷ்யம் பண்ணியருளும்போது ஸூத்ரவாக்யங்களில் ஸந்திக்தங்களான அர்த்தங்களையெல்லாம் ஆழ்வாருடைய திருவாய்மொழியைக் கொண்டு நிர்ணயித்து ஒருங்கவிட்டருளுமவராகையால், தமக்கு உபஜீவ்யமான திருவாய்மொழியை அருளிய நம்மாழ்வாரைக் குறித்தே ஸூத்ரவ்யாக்யானமான ஸ்ரீ பாஷ்யத்தின் தொடக்கத்தில் மங்களச்லோகம் ஸாதித்திருப்பரென்று அறுதியிடுவது யுக்தமே யன்றோ? ஆக இந்த ச்லோகம் நம்மாழ்வாரைப்பற்றி எழுந்ததேயாகுமென்று ப்ரதிஜ்ஞை செய்து, அதிலுள்ள ஸப்தம்யந்தமான எல்லாப் பதங்களையும் நம்மாழ்வாரிடத்தில் அழகாகப் பொருத்திக் காட்டினர். அதன் சுருக்கம் வருமாறு:



இதில் முதல்பதம் ஆழ்வாரிடம் அந்வயிக்கும் போது, (1) அகிலம் புவநஜந்மஸ்தேமபங்காதிலீலே: யஸ்ய என்றும் (2) அகிலபுவந

ஜந்மஸ்தேமபங்காதிநா லீலா யஸ்ய என்றும் இவ்விரண்டு வ்யுத்பத்தியை யும் பெறும். (1) ''வாஸுதேவஸ் ஸர்வம்'' என்கிறபடியே, உலகின் ஆக்கம் அளிப்பு அழிப்பு முதலியவற்றை இன்புறும் விளையாட்டாகவுடைய எம்பெரு மானையே அகிலமாக = உண்ணுஞ்சோறு பருகுநீர் தின்னும் வெற்றிலையும் எல்லாம் கண்ணன்'' என்று தாம் அருளிச் செய்தபடியே தாரகபோஷக போக்யங்களெல்லாமாகக் கொண்டவர் என்ற முதற் பொருளும், (2) எல்லா வுலகின் ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரங்களுக்கு ஆதியான (காரணனை) எம் பெருமானோடு ''என்னுடைய பந்தும் கழலும் தந்து போகு நம்பீ'' என்றிப் படைகளிலே விளையாடுமவர் என்ற இரண்டாம் பொருளும் நம்மாழ்வாரிடம் நன்கு பொருந்தும். இனி இரண்டாம் பாதமான, நன்கு வணங்கும் பல்வகை அதிகாரிகளின் திரளைக் காப்பதில் ஒப்பற்ற விரதமுடையவர் என்னும் பொருள்பட்டு நிற்கும் ''விநத விவித பூதவ்ராதரக்ஷைக தீக்ஷே'' என்பது, ''ஸ்ரீமந் நாராயண சரணௌ சரணம் ப்ரபத்யே'' என்று எல்லோ ரும் சரணமாக (நிரபேக்ஷோபாயமாகப்) பற்றுவது எம்பெருமானுடைய திரு வடிகளையேயாகையாலும் அத்திருவடிகளே நம்மாழ்வா ராகையாலும், ஆழ்வாரிடம் பொருந்தக் குறையில்லை. மூன்றும் விசேஷணம் ''ச்ருதி சிரஸி விதீப்தே'' என்பது. மறைமுடியில் மிக விளங்கு



மவர் என்று பொருள்படும் அது. ''தத்விப்ராஸோ விபந்யவோ ஜாக்ருவாம்ஸ: ஸமிந்ததே'' என்கிற மறைமுடி (வேதாந்த) வாக்யத்தில் ஆழ்வார் விளங்கு கின்றமை காண்மின். விப்ராஸ:-விப்ரா: என்றபடி. ''ந சூத்ரா பகவத் பக்தா: விப்ரா: பாகவதா: ஸ்ம்ருதா:'' என்ற ப்ரமாணத்தின்படி அத்யந்த பகவத் பக்தரான ஆழ்வார் விப்ரரேயென்னத் தட்டில்லை. ஆத்மாநம் லோகாந்ச விசேஷேண பாபேப்ய: பாதி (= தம்மையும் உலகோரையும் பாபங் களினின்றும் மிகவும் விடுவிக்குமவர்) என்ற வ்யுத்பத்தியுடைய இச்சொல் ஆழ்வாரிடம் அந்வயிப்பதில் ஐயமேதுமில்லை. விசேஷேண பணயந்தே என்ற வ்யுத்பத்தியைப் பெற்ற விபந்யவ: என்ற பதம் எம்பெருமானை விசேஷமாகத் துதிப்பவர் என்றும் பொருள் படும். இப்பொருள் - 'நண்ணுவசுரர் நலிவெய்தவும் நல்லவமரர் பொலிவெய்தவும் எண்ணுதனகளெண்ணும் நன்முனிவர் இன்பம் தலைசிறப்பவும் (= நன்முனிவர் இன்பம் தலைசிறந்து எண்ணுதனகளெண்ணவும்) எம்பெருமானைப் பாடித்

துதித்த நம்மாழ்வாரிடம் பொருந்தாமை யில்லை. ஜாக்ருவாம்ஸ:—விழித்திருப்பவர் என்னும் பொருளுடைய இச்சொல் "கண்ணாரக்கண்டு கழிவதோர் காதலுற்றார்க்கும் உண்டோ கண்கள் துஞ்சுதலே" என்று தாம் அருளிய படியே எப்போதும் தூக்கமின்றி விழித்திருக்கும் ஆழ்வாரிடம் அமைந்துள்ளது. இங்ஙனம் விப்ரராகவும் விபந்யுவாகவும் விநித்ரராகவும், ஸமிந்ததே=விளங்குகிறார் ஆழ்வார் என்று கூறும் வேதாந்த வாக்யத்தில் விளங்குகின்றமை ஆழ்வார் பக்கல் கண்டோம். ச்ருதியில் ஸமிந்ததே என்ற தன் பொருளேயே எம்பெருமானார் இங்கு விதீப்தே என்று மொழி பெயர்த்தருளினர். (=ஸம் என்பதற்கு விவரணம் வி என்பது, இந்தீதாதுவின் விளக்கம் தீப்தே என்பது.) ஸ்ரீநிவாஸே என்ற விசேஷணம் ஸம்பத்துக்கு இருப்பிடமானவர் என்று பொருள்பட்டு நிற்கும், இராவணன் திரஸ்கரிக்க, நிற்க இடமுமில்லாமல் ஆகாசத்தில் நிற்கும் விபீஷணும் வானை 'அந்தரிக்ஷகத: ஸ்ரீமான்' என்று கூறிய வால்மீகி பகவான் இராமபிரானோடு சேர வேணுமென்ற பாரிப்பையே ஸ்ரீசப்தத்தால்குறித்தனர். நாட்டையும் மனைவியையும் விட்டு மண்வெட்டியும் கூடையும் கொண்டு இராமபிரான் பின் சென்ற இளைய பெருமாளைப் பற்றி "லக்ஷ்மணோ லக்ஷ்மி ஸம்பந்ந;" என்று சொல்லிய அம்முனிவரர், இராமபிரானோடு சென்று அவர்தமக்குக் கைங்கர்யம் செய்ய வேணுமென்ற பாரிப்பையேயன்றோ லக்ஷ்மீ சப்தத்தினால் குறித்திருக்கிறார். அங்ஙனமே முதலைவாயில் அகப்பட்டுத் துடிக்கும் கஜேந்த்ராழ்வான், விஷ்ணு தர்மத்தில் "ஸது நாகவர: ஸ்ரீமான்" என்று ஸ்ரீமானாகக் குறிக்கப் பெற்றமைக்குக் காரணம்—பறித்த பூவைத் திருவடியில் பணிமாறவேணுமென்ற கைங்கரியப் பாரிப்பேயன்றோ? அங்ஙனமே ஒழிவில் காலமெல்லா முடனாய் மன்னி வழுவிலாவடிமை செய்ய வேண்டும் என்று பாரித்த நம்மாழ்வாரிடம் ஸ்ரீநிவாஸத்வம் சாலப் பொருந்தும். ப்ராப்யர் என்ற பொருளுடைய பரஸ்மிந் என்னும் விசேஷணமும் ப்ராப்யத்திற்கு எல்லை நிலமான ஆழ்வாரிடம் அழகாக அமைந்ததேயாகும். இது வரையில் ஐந்து விசேஷணங்களின் பொருத்தம் அனுபவிக்கப்பட்டது. இனி ப்ரஹ்மணி என்னும் விசேஷ்யபதம் ஆழ்வாரைக் குறிக்குமழகு கேண்மின். ப்ரஹ்ம என்பதற்கு மிகப் பெரிய பொருள் என்று அர்த்தம். உண்மையில் "மஹதோ மஹீயாந்" என்னப்பட்ட பரம்பொருள் ஒன்றே மிகப் பெரிய பொருளாகும். இங்ஙனம் இருக்க,



"புவியுமிருவிசும்பும் நின்னகத்த, நீ என்
செவியின் வழிபுகுந்தென்னுள்ளாய்;—அவிவின்றி
யான் பெரியன், நீ பெரியை யென்பதனை யாரறிவார்,
ஊன்பருகு நேமியாய் உள்ளு"

என்ற பெரிய திருவந்தாதிப் பாசுரத்தில் ஆழ்வார், உபய விபூதி யுக்தனைய் மிகப் பெரியவனை எம்பெருமானையும் தம் காது வழியாக உள்ளே புகுத்தி அங்கேயே அவனை யிருத்திக் கொண்டிருக்கும் தம்மையே அவனைக் காட்டிலும் மிகப் பெரியவராகக் கூறி அசைக்க முடியாமல் ஸ்தாபித்தருளினாராகையால் ப்ரஹ்மணி என்ற விசேஷ்யம் ஆழ்வாரைக் குறித்தல் மிகவும் ஸ்வரஸமாகும். இப்படிப்பட்ட நம்மாழ்வாரிடத்தில் "பவது மம சேமுஷீ பக்திரூபா" என்று-பக்தி ரூபமான ஜ்ஞாநமானது தமக்கு உண்டாக வேணுமென்று ப்ரார்த்திக்கிறார் எம்பெருமானார். எம்பெருமானுடைய நிர்ஹேதுக க்ருபையினால்; "மதிநல மருளினன்" என்கிறபடியே அப்பெருமானிடம் நலமான மதியை பக்திரூபமான ஜ்ஞானத்தை ஆழ்வார் பெற்றது போல, ஆழ்வாருடைய நிர்ஹேதுகக்ருபையினால் அவர் தம்மிடம் நலமான மதியை எம்பெருமானார் பெற ஆசைப்படுகிறார். (இது காஞ்சி ஸ்வாமியின் உபந்யாஸச் சுருக்கம்.)



இவ்வாறு உபந்யஸித்தருளிய ஸ்ரீ காஞ்சி ஸ்வாமி மறுபடியும் ஸ்ரீஜீயர் ஸ்வாமி திறத்தில் நன்றிபறிதலைத் தெரிவித்துத் தம் சொற்பொழிவை முடித்தருளினர்.

பின்பு அடியேன், "யந்மநீஷிபதாம்போஜரஜ: கணபவித்ரிதம், ததேவ பவநம், நோசேத் பகாரஸ் தத்ர லுப்யதே" (=ஞானநுஷ்டானங்கள் நிறைந்த பெரியோர்களின் திருவடித் தாமரைகளின் சிறுதுகள்பட்ட இடமே பவனமாகும், இல்லையேல் பவனமென்னும் சொல்லை விட்டுப் பகரம் நீங்க, அவ்விடம் வனமேயாகும்) என்ற ச்லோகரத்நத்தின்படி; ஸ்ரீ சிறிய ஜீயர்ஸ்வாமி இது வரையில் வனமென்று தாம் நினைத்திருந்த தமது மடத்தை. ஸ்ரீஸ்வாமியை எழுந்தருளச் செய்து பவனமாக்கி மிகவும் மகிழ்ந்திருக்கக்

கண்டு, ஸ்ரீஜீயர்ஸ்வாமிக்கு ப்ரதிநிதியாக, அஷ்டதிக்கஜாசார்யர்களில் ஒருவரான ஸ்ரீ ஜீயர்ஸ்வாமியினுடைய மடத்தின் சிலாசாஸநத் திறப்பு விழாவினைச் சிறப்புற நடத்த, அஷ்டதிக்கஜாசார்யர்களில் ஒருவரான ப்ரதிவாதி பயங்கரம் அண்ணன் வழித்தோன்றலான ஸ்ரீஸ்வாமியே தகுந்தவரென்று கூறி, ஸ்ரீகாஞ்சீஸ்வாமி தம்முடைய திருமேனித் தளர்ச்சியையும் பொருட்படுத்தாமல் எழுந்தருளி விழாவினைச் சிறப்பித்ததற்கு க்ருதஜ்ஞதையை விண்ணப்பித்து, ஸபையை அலங்கரித்த மற்ற பெரியோர் திறத்திலும் நன்றி தெரிவித்து ஸத்தை பெற்றேன்.

ஸ்ரீஜீயர் ஸ்வாமி தமது ஔதார்யத்திற்குத் தக்கவாறு ஸ்ரீகாஞ்சீ ஸ்வாமியை—நல்ல சால்வையொன்றினைப் போர்த்தி விசேஷ ஸம்பாவனை செய்து கௌரவித்தருள, கோஷ்டிக்குத் தாம்பூல பலவிநியோகமாகி ஸபை இனிதே முடிவுற்றது.

மாலை 6 மணியளவில் ஸ்ரீகோவிந்தராஜப் பெருமாள் ஸர்வாபரண பூஷிதராய் சேஷவாகனத்தில் புறப்பட்டெழுந்தருள, ஸ்ரீகாஞ்சீ ஸ்வாமி அப் பெருமாளை மங்களாசாஸனம் செய்தருளி, ஸ்ரீஜீயர்ஸ்வாமியிடம் விடை பெற்று ஸ்ரீகாஞ்சிக்குத் திரும்பியருளினார்.

திருப்பதி
3-2-79

இங்ஙனம்
தி. அ. க்ருஷ்ணதாஸன்

---

# இஞ்சிமேட்டு ஸ்ரீமதழகிய சிங்கரின் சதாப்திபூர்த்தி மஹோத்ஸவ நிகழ்ச்சி

அனக்காவூர் **A. T. துரைஸ்வாமிதாஸன்**

ஸ்ரீமதஹோபில மடத்தில் 42-பட்டத்தில் மூர்த்தாபிஷிக்தராய் எழுந்தருளியிருந்த ஸ்ரீ ஸ்ரீரங்கசடகோபயதீந்த்ர மஹாதேசிகனின் நூறுவது திருநக்ஷத்ர பூர்த்தி மஹோத்ஸவம் 19—1—79 மதுராந்தகத்தில் உபக்ரமித்து பத்துநாட்கள் விசேஷமாக நடைபெற்றது. ஸ்ரீமதழகியசிங்கரின் நூறுவது திருநக்ஷத்ர ஜ்ஞாபகார்த்தமாக மதுராந்தக ஸம்ஸ்கிருத கலாசாலையை விச்வ வித்யாலயமாக விரிவுபடுத்த இதாநீ ஸ்ரீமதழகியசிங்கர் திருவுள்ளம் பற்றியாயிற்று. அதற்காக பம்பாயில் வாழ்ந்துவரும் பெருவள்ளல் ஸ்ரீ ஆர் ராமாநுஜ ஐயங்கார் ஸ்வாமி அவருடைய தகப்பனார் ஸ்ரீரங்கஸ்வாமிஐயங்கார் ட்ரஸ்டிலிருந்து பத்து லக்ஷ ரூபாய் செலவு செய்து பெரிய கட்டிடத்தை நிர்மாணித்துக் கொடுத்திருக்கிறார். அக்கட்டிடத்தை இதாநீ ஸ்ரீமதழகிய சிங்கர் ஹஸ்த நக்ஷத்ரத்தில் திறந்து வைத்து மாலோல வித்வத் ஸதஸ்ஸை

உபக்ரமித்தாயிற்று. அப்பொழுது இஞ்சிமேட்டு ஸ்ரீமதழகியசிங்கர் பாடசாலையையும், ஸதஸ்ஸையும் உபக்ரமித்ததின் நோக்கத்தைச் சொல்லி சுபேநமநஸாத்யாதம் என்கிறபடி நல்ல திருவுள்ளத்ததால் ஆரம்பித்தால் இவைகள் மேன்மேலும் வ்ருத்தியடைந்து வருவதை நாம் பார்க்கிறோம். ஸ்ரீ அழகியசிங்கரின் திருவுள்ளத்திற்கு உகப்பான ஸ்ரீபாஷ்ய விசாரத்தை செய்வோம் அதுதான் அம்மஹானுக்கு நாம் செய்யும் கைங்கர்யமாகும் என்றருளிச் செய்து ஸதஸ்ஸை உபக்ரமித்து வைத்தாயிற்று. காலை மாலை இரண்டு வேளைகளிலும் ஸ்ரீபாஷ்யத்தில் வாக்யார்த்தம் நடைபெற்றன. வழக்கப்படி ஸ்ரீமதழகியசிங்கர் அநிதரஸாதாரண ரீதியில் கேள்விகளைக் கேட்டு வித்வான்களை ஸந்தோஷிக்கச் செய்தாயிற்று. தென்னிந்தியாவில் உள்ள ப்ரபல வித்வான்கள் எல்லோரும் ஸதஸ்ஸிற்கு வந்திருந்தார்கள். வித்வான்களுக்கும் வேத ப்ரபந்த அத்யாபகர்களுக்கும் நூறு ரூபாய் ஸம்பாவனையும் மார்க்கச் செலவையும் கொடுத்தாயிற்று. திருநக்ஷத்திரத்தன்று ஐயாயிரம் பேர்களுக்கு மேல் வந்திருந்தார்கள். சாற்றுமுறை நன்கு நடைபெற்றது. ஸதஸ்ஸிற்கு வேண்டிய த்ரவ்யம் பூராவையு பம்பாய் வள்ளல் ஸமர்ப்பித்தார்.

---

# தேவப்பெருமாள் திருவருள்

இப்பெயர் பூண்ட வொரு நூல் சமீபகாலத்தில் வெளிவந்துள்ளது; அந்நூலின் பிரமேயம் இன்னதென்று தெரிவதற்காக அதிலுள்ள முன்னுரையை இதன் கீழே வெளியிடுகிறோம்.

முகவுரை வருமாறு

'தேவப்பெருமாள் திருவருள்' என்னுமிந்நூல் இப்போதாகப் புதிதாய் எழுதப்பட்டதன்று. பல வாண்டுகட்கு முன்பு ஸ்ரீகாஞ்சீ பிரதிவாதி பயங்கரம் ஸ்வாமியால் எழுதி வெளியிடப்பட்ட பல கட்டுரைகளின் தொகுப்பாக இப்போது மறுபதிப்பு செய்யப்பட்டது. ஸ்ரீ ஸ்வாமியின் பல நூற்றுக் கணக்கான நூல்களில் சில வருஷகாலமாய் கிடைப்பதற்கு அருமையாகியுள்ள நூல்களையெல்லாம் மறுபதிப்புச் செய்ய, சென்னை, மதுரை' திருச்சி, திருநெல்வேலி முதலானவிடங்களில் பல வைதிக லௌகிகத் தலைவர்கள் கூடிச் சபைகள் ஏற்படுத்தியிருப்பதால் அவற்றில் ஒரு சபையார் செய்த திருப்பணி இது.

காஞ்சீபுரம் தாதாசாரியர்களில் ஒருவரான ஸ்ரீமான். **R**. வரத தாதாசாரியர் என்பவர் நேற்று கார்த்திகைமாதத்தில் ஸ்ரீ தாததேசிகன் திருநக்ஷத்திரத்தன்று ஆங்கிலத்தில் தாததேசிகன் பெருமைகளைப் பற்றி ஒரு புத்தகம் வெளியிட்டதாகவும், அதில் தகுதியற்ற பல விஷயங்கள் பொறிக்கப் பட்டிருப்பதாகவும், அப்புத்தகத்திற்கு 40ரூ விலை வைத்திருப்பதாகவும் கேள்விப் படுகிறோம். 400, அல்லது 4000ரூ விலைவைத்தால் அதை ஒருவரும் கண்ணெடுததுப் பாராமலேயிருக்கலாம் அதற்கு மறுப்பு வெளிவராமலிருப்பதற்கு இது நல்லவுபாயமல்லவா?

40ரூ விலையுள்ள அச்சுவடியில் எழுதப்பட்டுள்ள அபத்த பஞ்சாங்க புஞ்ஜங்களுக்கு, தேவப்பெருமாள் திருவருளென்னுமிந்த நூலே போதுமானதென்று திண்ணமாகச் சொல்லலாம்.

ஸ்ரீமத் பிரதிவாதிபயங்கர வம்சஸ்தர்களின் மூலபுருஷரான அண்ணன் வடகலைவகுப்பைச்சேர்ந்தவரென்பது ஷ்டிதாதாசாரியர் சுவடியில் ஒரு அஸம்பத்தப் பேச்சு. ஸமீப காலத்தில் பிரதிவாதி பயங்கரம் ஸ்வாமியின் ஆப்தர்மூல மாக வெளிவந்திருக்கிற உத்தம வித்வன் மனோரஞ்ஜனத்தில் உத்தமூரர்க்கு இட்ட வ்யாமோஹ ப்ரசமௌஷதம் என்று வெளிவந் திருக்கும் பகுதியை வாசித்துப்பார்த்தால் நம் வரத தாதாசாரியார் பல்பல வுண்மைகளை எளிதில் உணர்ந்து கொள்ளுவர்; அதனோடு கூட நேற்று மார்கழியில்வெளிவந்துள்ள சதப்ரச்ந ரத்னவளியை ஆதியோடந்தமாக வாசித்துப் பார்த்தாலும் பலவுண்மைகள் விளங்கும்.

நமது நண்பர் வரததாதாசாரியர், ஸ்ரீ தாததேசிகனையும் ஸ்ரீ வேதாந்த தேசிகனையும் வடகலையென்று மருண்டிருக்கிறார்போலும். 1909ல் எழுதி வெளிவந்துள்ள தாததேசிகனீடுபாடு சின்ன காஞ்சியில் ஒவ்வொருவர் திருமாளிகையிலுமுள்ளது. அதை மறுபடியும் வாசித்தாராகில் முந்தின மருள் தொலையும். (2) தேசிக ரஹஸ்யமொன்றில் முடிவில் "விசுத்ததேசிகவதா ரங்கதாம்நி வ்யலிக்க்யத" என்றும், பகவத்தியாநஸோபாநத்தின் முடிவில் "ரங்காஸ்தாநே ரஸிக மஹிதே ரஞ்ஜிதா சேஷசித்தே வித்வத் ஸேவாவிமலமநஸா வேங்கடேசேந" என்றும், முநிவாஹந போகத்தின் முடிவில் "நாண் பெரியோமல் லோம்நாம் நன்றுந்தீதும் நமக் ஸ்ரீ ரங்கத்தில் நாச்சியார் ஸன்னிதிக்கெதிரே தேசிகன் ஸன்னிதிவாசற் கொடுங்கையில் திகழும் காரைக் கட்டிடமான தென்கலைத் திருமண்காப்பு குறைப்பாருளரென்று நாடுவோமே" என்றும் அருளிச் செய்த நம் ஸ்வாமி தேசிகன் தாமே தமது நிலைமையைத்தெளிய வெளியிட்டருளினாராயிற்று. பிரபலமான ஸாக்ஷியல்லவா ?

காஞ்சியில் ஸ்ரீ ஜகத்குரு காதி ஸ்வாமி யெழுந்தருளியிருந்த போது (பழையதர்மஹர்த்தாக்களான) அய்யா. ரகுநாத தாதாசாரியாரும், மேல் பாக்கம் குமார தாதாசாரியாரும் தனித் தனியே சில ஸமயங்களில் வந்து வார்த்தையாடுவர்கள். ஒருநாள் இருவரும் சேர்ந்து வர நேர்ந்து விட்டது. அன்று ஸ்ரீ பெரும்பூதூர் ஸ்வாமியொருவர் ஸ்ரீ காதிஸ்வாமி ஸன்னிதிக்கு வந்திருந்தார். ஏதோ வார்த்தை யடைவில், ரகுநாத தாதாசாரியார் ஸ்ரீபெரும் பூதூரில் பழங்காலத்தில் தாம் அநுபவித்த ஒப்புயர்வற்ற ஸன்னிதி மரியாதைகளை விரிவாகச் சொல்லிக் கண்ணீர் பெருக்கினர். அப்போது உடனிருந்த குமாரதாதாசாரியார் "கீழ்க் காலங்களில் மனம்போனபடி யெல்லாம் சிலவிஷமங்களைச் செய்து விட்டு, மொட்டைச்சி கூந்தலை நினைத்துக்கொண்டு அழுவது போலே இப்போது அழு, விக்கி விக்கி யழு" என்று சொல்லிக் கொண்டே எழுந்துசென்றார், இது அறுபது வருடங் களுக்கு முந்தின செய்தி. இன்று போலுள்ள தந்தோ '.....

★

# ஸ்ரீமத் பரமஹம்ஸ இஞ்சிமேட்டழகியசிங்கர்

**பத்ராத்ரிபரால்** எழுதப்பட்டு சதாப்தி மலரில் வெளிவந்த கட்டுரை.

நெடு நாள் அஹோபில மடாஸ்தானத்தை அலங்கரித்திருந்து இருபத்தைந்து வருஷங்களுக்கு முன்பு திருநாடலங்கரித்த ஸ்ரீமத் இஞ்சிமேடு ஸ்வாமி பூர்வாச்ரமத்தில் இஞ்சிமேடு ரங்கநாதாசார்ய ஸ்வாமி என்று வ்யபதிஷ்டர். திருப்பதியில் ஸ்ரீமத் புரிசை ஸ்ரீரங்காசார்ய ஸ்வாமிஸந்நிதியில்நெடுநாள்வாழ்ந்து சாமான்ய சாஸ்திரங்களை அதிகரித்து உபயவேதாந்த ப்ரவர்த்தந ப்ரவீணராய்க் காஞ்சியில் பல ஆண்டுகள் எழுந்தருளியிருந்தார். அடியேனுடைய கிருகத்திற்கு அதிஸமீபத்திலேயே ஒரு திருமாளிகையை ஸ்வகீயமாகக் கொண்டு குடி வாழ்ந்து வந்தார். அப்போது இருவோமுக்கும் மிக நெருங்கிய பழக்கம் ஏற்பட்டது. அநுஷ்டானத்திற்கு வெள்ளக்குளம் எழுந்தருள்வர். அடியேனுடைய கிருகத்தின் பக்கத்திலுள்ள ஸந்துவீதி வழியாகவே அந்தக் குளத்திற்குச் செல்ல வேண்டுமாதலால் இருவரும் ஒன்று சேர்ந்தே குளம் செல்வது தினப்படியான வழக்கம். திரும்புகிற ஸமயத்தில் சேர்த்தி ஏற்படுவது அரிதாகும். செல்லுகிற ஸமயத்தில் நியமேந சேர்ந்துதான் செல்வது. அப்போதைய ஸம்பாஷணைகள் ஐம்பது வருஷங்களுக்கு மேலானாலும் மறக்க முடியாதவை.

திருப்பதியில் தாம் வாழ்ந்தபோது ஸ்ரீமத் புரிசை ஸ்வாமி பக்கலிலே தாம் அநுபவித்த விசேஷங்களை ஒவ்வொரு நாள் ஒவ்வொன்றாக ஸாதித்தருள்வர். மற்றும் அநேக க்ராந்திக விஷயங்களையும் ஸாதித்தருள்வர். இடையிடையே ஸம்ப்ரதாயார்த்த சர்ச்சைகளும் நடைபெறும். கோபதாபங்கள் சிறிதுமில்லாமல் புன்முறுவலோடே ஸாதிப்பர்; தூமுறுவல் கொண்ட முகத்துடனே கேட்டருள்வர். மனச்சாக்ஷியை மீறியோ அப்ராமாணிக வழியை அவலம்பித்தோ விதண்டா வாதமாகவோ ஓரக்ஷரமும் ஸாதிக்க மாட்டார். அந்த ஸ்வாமியிடத்தில் அடியேன் விசேஷித்து அநுபவித்த குணம் இது. பெருங்கட்டூர் கண்டாவதாராசார்ய ஸ்வாமி என்றொருவர் ஸந்நிதி வீதியில் எழுந்தருளியிருந்தார், அவர் கேவல வையாகரணர். கோவில் பாடசாலையில் பல வருஷங்கள் வ்யாகரண ப்ரவசநம் செய்துகொண்டிருந்தவர். அந்த ஸ்வாமியின் இயல்வு இஞ்சிமேடு ஸ்வாமியின் இயல்வுக்கு நேர்மாறானது. விஷய சர்ச்சை என்றெடுத்தால், அது எந்த விஷயமானாலும் சரி, கோபதாபங்களில் தான் பர்யவஸித்து நிற்கும் அவர்க்கு. உச்சைருத்கோஷம் பிரபலமாக இருக்கும். இஞ்சிமேடு ஸ்வாமியின் கம்பீர ப்ரக்ருதிகளை நினைதொறும் சொல்லுந்தொறும் நெஞ்சு கனிந்திருக்கும்.

அஸ்மதாசார்யரான ஸ்ரீ ஜகத்குரு ப்ரதிவாதி பயங்கரம் காதி அனந்தாசார்ய ஸ்வாமி தமது திருமாளிகையில் ஒரு ஸம்வத்ஸரம் [ப்ரஜோத்பத்தி வருஷம் என்று ஞாபகம்] ஐந்து நாள் வித்வத்ஸதஸ்ஸு நடத்தினர். அதில் இருபத்தைந்து வித்வான்கள் கூடினர். முக்கியமாக வேதாந்தார்த்தவிசாரம் செய்வதற்காகவே இந்த ஸம்மேளனம் கூட்டப்பட்டது ஸ்வாமியால். மைஸூர் ப்ராந்தத்தவரான ஸ்ரீமது பயவே. நெக்குஹள்ளி திருமலாசாரியர் ஸ்வாமி என்கிற ஒரு மஹாவித்வான் பெரும்பாலும் தம்மோடொத்த வித்வானை ஓர் அந்தேவாஸியுடன் யாத்ருச்சிகமாக அந்த ஸதஸ்ஸுக்கு ஐந்து நாளும் எழுந்தருளியிருந்தார். (அந்த ஸ்வாமி ஸோமாசியாண்டான் திருவம்சஸ்தர் என்று ஞாபகம்.) ஸ்ரீகாதி ஸ்வாமியின் வேண்டுகோளினால் ஸ்ரீமத் இஞ்சிமேட்டு ஸ்வாமி [க்ருஹஸ்தாச்ரமஸ்தர்] ஐந்து நாளும் ஸபாபதியாக எழுந்தருளியிருந்தார். கீழே ப்ரஸ்தாவித்த நெக்குஹள்ளி ஸ்வாமி ஒரு நாள் தம்முடைய ப்ரவசநத்தில் பூர்வமீமாம்ஸா விஷயமொன்று ப்ரஸ்தாவித்தார். இஞ்சிமேட்டு ஸ்வாமி அதில் அநுபபத்தியை ஆவிஷ்கரித்தார் உடனே அந்த ஸ்வாமி "இந்த விஷயம் உமக்குத்

தெரியாது. கேட்டுக்கொண்டிரும்'' என்று உத்படமாகக் கூறினர். இஞ்சிமேட்டு ஸ்வாமி உடனே எழுந்து வெளியே சென்றுர். ஏதோ திருவுள்ளத்தில் சீற்றத்தினால் எழுந்தருளி விட்டதாகவே எல்லோரும் நினைத்து வருந்தினர்.

ஸ்ரீகாதிஸ்வாமியும் அப்படியே நினைத்து, ''அண்ணு! நீபோய்அவரை எழுந்தருளப்பண்ணி கொண்டுவா'' என்று அடியேனுக்கு நியமித்தருள அடியேன் புறப்பட்டுச் செல்லுகையில், ஸ்வாமி ஒரு ஸ்ரீகோசத்துடன் எதிரே எழுந்தருளுகிறார் அந்த ஸ்ரீகோசம் 'டுப்டீகா' என்கிற மீமாம்ஸா க்ரந்தம் என்று ஞாபகம். ஏறக்குறைய ஐம்பது வருஷமாய்விட்டது க்ரந்தத்தின் பெயர் வேறாகவும் இருக்கலாம். அதில் ஒரு பக்கத்தை எடுத்து அந்த நெக்குஹள்ளி வித்வான்கையில் கொடுத்து, ''இதை வாசியும்'' என்றுர். அவருடைய அந்தேவாஸி உரக்க வாசித்தார். உடனே அந்த வித்வான் வேறு ஒரு வார்த்தையும் சொல்லவில்லை; ''ஜிதோஸ்மி, ஜிதோஸ்மி'' என்று இரு முறை சொல்லி நின்றுர். அப்போது ஸதஸ்யர்களான வித்வான்களெல்லாரும் விஸ்மயஸ்திமிதராயினர். அந்த விஷயம் வித்வான்கள் அனைவர்க்கும் நன்கு புரியும்படி இஞ்சிமேட்டு ஸ்வாமியே விரிவாக உபந்யஸித்தார். அந்த ஸந்நிவேசம் எத்தனை வருஷமானுலும் மறக்க முடியாமலிருக்கின்றது. இது அடியேனுக்கு நித்ய ஸ்மரணத்திலுள்ள விஷயம்.

ஸ்ரீஸ்வாமிக்கு இந்த வைதுஷ்யப் பெருமை ஒரு புறம் இருக்க, ஸௌலப்ய ஸௌசீல்யாதி குணவிசேஷங்கள் வாசாமகோசரம் அடியேனுடைய வீதியிலேயே ஸமீபத்தில் எழுந்தருளியிருந்தபடியாலே ஸ்வாமியை ஸேவிக்கப்பெருத நாள்ஒன்று கூடத் தேருது.

ஸ்ரீஸ்வாமியின் ஜாமாதா நல்ல வேதாந்திய யநசீலராகையாலே தினப்படியாக அவரோடு க்ரமசர்ச்சை சொல்லுவதற்கு இரவில் திருமாளிகைக்கு விடைகொள்வேன். அப்போது ஒவ்வொரு நாளும் மேலே என்ன எழுதுவது என்று தோன்றவில்லை. திருவரங்கம் பெரிய கோயிலிலும் திருவெவ்வுளூரிலும் அடிக்கடி விடைகொண்டு ஸேவிப்பேன். ''அலமேலு ஸௌக்கியமா? கனகம் ஸௌக்கியமா?'' என்பதே முதல் குசலப்ரச்நம். 'அலமேலு' எனது திருத்தாயார் பெயர். 'கனகம்' தமக்கையின் பெயர். அவ்விருவர் பக்கலிலும் (ஆச்ரமஸ்வீகாரடான பிறகுங்கூட) ஸ்ரீஸ்வாமியின் அநுக்ரஹம் நிரவக்ரஹமாக இருந்தது.

ஸ்ரீஸ்வாமியின் ப்ரபாவாதிசயம் பன்னியுரைக்குங்கால் பாரதமாமென்று நிற்கிறேன்.

# ஆழ்வார் திருநகரியில்

## ஷஷ்டியப்த பூர்த்தி யுத்ஸவம்

ஸ்ரீ உ. வே. R. P. இராமய்யங்கார் ஸ்வாமியின் ஷஷ்ட்யப்தபூர்த்தி மஹோத்ஸவம் 26-11-78 ஞாயிற்றுக்கிழமை யன்று வெகு சிறப்பாக நல்லார் நவில் திருக்குருகூரில் நடைபெற்றது. அவ்வைபவத்தை முன்னிட்டு ஐந்து தினங்கள் திவ்ய ப்ரபந்தவேத பாராயண கோஷ்டிகளும் உபந்யாஸங்களும் நடைபெற்றன. ஸ்ரீரங்கம்ஸ்ரீ உ. வே. தி. அ. சதாபிஷேகம் கோவிந்த நரசிம்ஹாசாரியர் ஸ்வாமிகள் ''கண்ணிநுண் சிறுத்தாம்பு'', உபந்யாஸமும் ஸ்ரீ உ. வே. இளையவில்லி பூவராஹாசாரியர் ஸ்வாமிகள் ஸ்ரீராமாயண உபந்யாஸமும் நிகழ்த்தினர். ஷஷ்ட்யப்தபூர்த்தி கண்டருளும்

ஸ்வாமியின் குணபூர்த்தி பற்றி ஸ்ரீ உ வே. பூவராஹாசாரியர் ஸ்வாமிகள் கீழ்வருமாறு குறிப்பிட்டார். "அடியோங்களுடைய திருத் தகப்பனர் ஷஷ்ட்யப்தபூர்த்தி காணும் ஸ்வாமிக்கு ஆசார்யர். ஸ்வாமி அடியோங்களுக்கு மாமாவும் ஆக வேணும். அடியோங்களுக்கும் ஸ்வாமிக்கும் அதைவிட மேலான பாந்தவ்யம் ஆசார்ய - சிஷ்ய பாவம்.

"தன்னுரியனுக்குத்தான் அடிமை செய்வது அவன் இந்நாடு தன்னில் இருக்கும் நாள் - அந்நேர் அறிந்தும் அதிலாசையின்றி ஆசார்யனைப் பிரிந்



திருப்பாரார் மனமே பேசு" என்ற ஸ்ரீ மணவாள மாமுனிகளின் நிலையே நம் ஸ்வாமியின் நிலையும். ஸ்வாமியின் இக்குணபூர்த்தியினுலேயே அடியோங்களுக்கு திருத்தகப்பனர் இல்லாத குறை தோற்றவில்லை". ஆக இங்ஙனம் ஸ்வாமியின் ஆசார்ய ப்ரதிபத்தியைச் சிறப்பித்துப் பேசி "ஸ்ரீராம பட்டாபிஷேகத்துடன்" மஹோத்ஸவத்தை இனிதே தலைக்கட்டி வைத்தார். பல திவ்ய தேசத்திலிருந்து வந்திருந்த எம்பெருமான்களின் ப்ரஸாதங்கள் ஸ்வாமிக்கு வழங்கப்பெற்றன.

இப்படிக்கு,
**ஸ்ரீசடகோபதாஸன் பொன்னப்பன.**

# நைச்யாநுஸந்தானம்

நமக்கு நைச்யாநுஸந்தாநம் ஸ்வரூபம் என்றறிந்து நாம் ''நீசனேன் நிறையொன்றுமிலேன்'' என்றும் ''சீலமில்லாச் சிறியன்'' என்றும் பல வாறு பாசுரங்களை முன்னிட்டுத் தாழ்வு சொல்லிக் கொள்ளுகிறோம். நம் வாயினால் வெளிவந்த அந்தத் தாழ்வு தன்னையே பிறரொருவர் நம்மை நோக்கி எடுத்துரைக்கத் தொடங்கினால்' என்னையா நீசனென்றாய்? என்னையா நிறையொன்று மில்லாதவனென்றாய்? என்னையா சீலமில்லாச் சிறியனென்றாய்? பாவீ! நீயன்றோ இப்படிப்பட்டவன்' என்று உடனே அவரை ஆயிரம் வகையாக தூஷிக்கவும் தண்டிக்கவும் தண்டிப்பிக்கவும் எழுகின்றோம். ஒவ்வொருவரும் தம் தம் அனுபவத்தில் இதை நிச்சயமாகக் காணலாம்.

சில விசேஷ காலங்களில் பெரியார்களை எழுந்தருளப்பண்ணி ஸ்வாமிந்! ஸ்ரீபாத தீர்த்தம் ஸாதிக்கவேணும் என்று வேண்டுகிறோம். அதற்கு அவர்கள் ஐயோ! அடியேனுக்கென்ன யோக்யதை யுண்டு? ஸகல விதத்திலும் அயோக்யனன்றோ அடியேன்' என்று பலபடியாக நிகர்ஷாநுஸந்தானம் பண்ணுகிறார்கள். இந்த அநுஸந்தானம் உள்ளவாறு செய்கிறபடியா? அல்லது இங்ஙனே சொல்லிக் கொள்ள வேண்டுவது ஒரு உபசார வழக்கு என்று கொண்டு செய்கிறபடியா? என்று நாம் யோசித்தால், அவர்களுடைய ஹ்ருதயத்தை நம்மால் தெரிந்து கொள்ளமுடியாதாயினும், அவர்கள் தாங்கள் அநுஸந்தித்த நீசத்தன்மையை நம் வாயினால் சொல்லிக்காட்டின விடத்தும்' (அதாவது நீர் மிகவும் அயோக்கியர் என்று பிறர் சொன்ன விடத்திலும்) அவர்கள் உகந்தேயிருப்பார்களாயின் அப்போது தான் அவர்களுடைய நைச்யாநுஸந்தானத்தை நாம் ஸஹ்ருதயமென்று நினைக்கலாகும்.

'அஹம் அமர்யாத:, அஹம் க்ஷுத்ர;' என்று நைச்யாநுஸந்தானம் பண்ணுமவர்கள் ''த்வம் அமர்யாத:, த்வம் க்ஷுத்ர;'' என்கிற பரோக்திகளை உகந்திருக்கிறார்களா? என்றே நாம் பார்க்கவேண்டும். கூரத்தாழ்வான் போல்வாரான சிலரே அங்ஙனமிருந்தார்கள் என்று சொல்ல வேண்டியதாகின்றது. தம்மைப்பற்றிப் பிறர் கூறும் நிகர்ஷோக்திகளைச் சிறிதும் ஸஹியாமல் உடனே பிரபலமாக ப்ரதி ஸத்காரம் செய்யப் புறப்படுமவர்கள் தாங்கள் செய்துக்கொள்ளும் நிகர்ஷாநுஸந்தானம் அர்த்தமற்றது என்றே சொல்லவேண்டும்.

''ஒருவன் உன்னை இடது தாடையில் அறைந்தானாகில் உடனே அவனுக்கு நீ வலது தாடையை ஆதரவோடு காட்டு'' என்று பிரஸங்க மேடைகளில் பேசுவாரை மிக மிகக் காண்கிறோம். அப்படி அவர்கள் பேசி இப்பால் வந்தவுடனே அவரை ஒருவர் அடிப்பதாகக் கையோங்கும்போதே என்ன நடக்கிறதென்பதையும் காணநின்றோம். ★